# 3

# ஆசை ஆசை ஆசை

அவன் கண்களை மூடிக்கொண்டான்.

மனசுக்குள்ளே அவளை முழுசாய் நிறுத்திப் பார்க்க முயற்சித்தான்.

கிட்டத்தட்ட ஒரு மாசமாய் நினைத்துநினைத்துப் பழகி இருந்ததால் கூப்பிட்டஉடன் ஓடிவரும் நாய்க்குட்டி மாதிரி மனசுக்குள் வந்து நின்றுகொண்டாள்.

அவள் ரொம்ப உயரமில்லை.

ஐந்து இரண்டு இருந்தால் அதிகம்.

அந்த உயரத்துக்கு ஏற்ற பருமன்.

அவளிடம் அவனுக்கு ரொம்பப் பிடித்தது அந்தச் சின்ன இடுப்பு. மடிப்புக்கள் இல்லாத அழகான இடுப்பு.

*34-24-36*—வேண்டும் என்று அவன் என்றைக்குமே ஆசைப் பட்டது இல்லை. ஆனால் எதிர்பாராத விதமாய் அப்படியே அமைந்துவிட்டது என்னமோ நிஜம்தான்.

மூக்கு முழி என்று ஒவ்வொன்றாய் துருவினால் ஏதாவது குறை தெரியுமோ என்னவோ, ஆனால் அவன் துருவவில்லை. அதனால் அவளிடம் குறை எதுவும் அவனுக்குத் தெரியவில்லை.

சொல்லப்போனால் அந்த ஃபிகரும், அந்த வெள்ளை நிறமும் அவன் எதிர்பார்க்காத ப்ளஸ் பாயிண்டுகள் என்றுகூடச் சொல்லலாம்.

பெண் பார்க்கப் போன அன்று அவள் ஒரு கார்டன் பிரிண்டட் ஜார்ஜெட் கட்டியிருந்தாள். லெமன் கலர் பூக்கள் உடம்பு பூராவும் பரவ நின்றபோது தன் வீட்டு மூலையில் சரம்

சரமாய் பூத்திருக்கும் மஞ்சள் சரக்கொன்றை ஞாபகம்தான் அவனுக்கு வந்தது.

தோளுக்குச் சற்றுக் கீழோடு தொங்கிய முடியை ப்ரஷ்ஷால் வாரி, காதுகளை மூடி, ஒரு கறுப்பு ரப்பர் பேண்டால் கட்டி இருந்தாள்.

'பெண்ணைப் பார்க்கறேன்னு கூட்டமா போறது, அங்கே மூக்கு பிடிக்க சொஜ்ஜியும் பஜ்ஜியும் சாப்பிடறது, அப்புறம் பெண்ணை நடக்கச் சொல்லி, பாடச்சொல்லி பாக்கறது—இந்த அசிங்கமெல்லாம் கூடாது.' அவன் கறாராய் முன்கூட்டியே சொல்லிவிட்டதால் அப்பா, அம்மா, அவன் மூன்று பேர் மட்டும் போயிருந்தார்கள்.

அவன் நேரில் பார்த்த முதல் பெண் அவள்தான்.

அவளுடைய நாசூக்கும், எண்ணி இரண்டு வார்த்தை பேசிய நாகரீகமும் அவனுக்குப் பிடித்துப் போயிற்று.

அன்றே அங்கேயே 'பெண்ணைப் பையனுக்குப் பிடிக்கிறது' என்று அப்பாவை விட்டுச் சொல்லச் சொன்னான். லக்னப் பத்திரிகை வாசிக்க நாள் குறிக்கச் செய்தான்.

பல வருஷங்களாய் கல்யாணம் வேண்டாம் என்று சொன்ன பிள்ளை இப்போதாவது மனம் மாறினானே என்ற சமாதானத் தோடு வரதட்சிணை கூடாது, ஆடம்பரமான கல்யாணம் கூடாது, இதைப் பண்ணலை, அதைப் பண்ணலை என்று யாரும் முணுமுணுக்கக் கூடாது என்று நீளமாய் மகன் போட்ட கண்டிஷனை பெற்றோர் ஏற்றுக்கொண்ட பிறகு அவன் தன் ஊருக்குப் புறப்பட்டான்.

ஹேமமாலினி கண்கள், ஸோபியா லாரன் மார்புகள், கே.ஆர். விஜயா பற்கள், வாணி ஜெயராம் குரல் என்று தனக்கு வரப்போகிறவள் இருக்கவேண்டும் என்று கனவு காணாத அவனுக்கு அவள் எப்படி இருந்தாலும் தானும் அவளும் வாழும் வாழ்க்கை மிஸ்டர் அண்ட் மிஸஸ் மித்ரா வாழ்வதைப்போல இருக்கவேண்டும் என்ற ஆசை மட்டும் நெஞ்சு நிறைய இருந்தது.

ஐந்து வருஷங்களுக்கு முன் வடக்கே இருந்த அந்த ஊரில், அந்த ராட்ஷஸத் தொழிற்சாலையில் ஒரு ஜூனியர் என்ஜினிய ராய் வந்து சேர்ந்த ஒரு சில நாட்களில் அவன் மித்ரா தம்பதியைப் பார்த்தான்.

இவன் வீடு 'ஸி' டைப் ஒற்றைப் படுக்கையறை கொண்ட சின்ன ஃப்ளாட்.

அவர்களுடையது எதிர்சாரியில் இருந்த 'டி' டைப். இரண்டு பெட் ரூம் கொண்ட பெரிய ஃப்ளாட்.

அந்த ஊரில் எல்லாமே உல்டாதான். 'ஏ' டைப் சின்ன வீடு என்றால் கீழே போகப்போக பெரிய வீடுகள்.

மித்ரா ஒரு செக்ஷன் என்ஜினியர். அவனுடைய நேர் மேல் அதிகாரி.

வீடும், தோட்டமும் எங்களைப் பாரேன், பாரேன் என்று கண்களைக் கட்டி இழுப்பதை முதல் நாள் அவர்கள் வீட்டுக்கு 'டீ' அருந்தப் போன அன்றே அவன் உணர்ந்துகொண்டான்.

"அஞ்சு—இதர் ஆயியே ஜீ—" என்று அழைத்து, சிரித்துக் கொண்டே ஸல்வார் கமிஸில் வெளியே வந்த அவளை 'என் மனைவி' என்று மித்ரா அறிமுகப்படுத்தினதும் அவன் ரொம்ப ஆச்சர்யப்பட்டுப் போனான்.

'இங்கே வாருங்களேன்'—என்று மனைவியையா அழைத் தான்? மனைவிக்கா 'ஜீ' மரியாதை! ஹௌ நைஸ்!

இரண்டு மணி நேரம் போல அங்கே இருந்து மித்ராவையும், அஞ்சுவையும் பார்த்ததில் அவன் ஒரு புது மனுஷனாக மாறிப் போனான் என்றுதான் சொல்லவேண்டும்.

அஞ்சு 'டீ' போட்டால் மித்ரா ட்ரேயில் கப் ஸாஸர்களை எடுத்து வைத்தான். டிபன் சாப்பிட்டானதும் அஞ்சு பீங்கான் கிண்ணங்களை அலம்பினால், மித்ரா அவைகளைத் துடைத்தான். அவனோடு பேசிக்கொண்டிருந்த நாழிகையில் மறுநாள் மித்ரா காரில் வெளியூர் போக வேண்டியிருந்ததால் அவள் வண்டியை எடுத்துக்கொண்டு பெட்ரோல் போட்டு, காற்று சரி பார்த்து வந்தாள்.

"நான் அஞ்சுவுக்கு ஒரு பார்ட் டைம் ஸர்வெண்ட்" என்றான் மித்ரா.

"நான் மித்ராவுக்கு ஒரு பார்ட் டைம் ட்ரைவர்" என்றாள் அஞ்சு.

இரண்டு பேர் முகத்திலும் சிரிப்பு—சந்தோஷம். நீ இல்லாமல் என்னால் இருக்க முடியாது என்ற பாவம், நான் இல்லாமல் உன்னால் இருக்க முடியாது என்ற கர்வம்.

இரண்டு வருஷங்கள் அவர்கள் அமெரிக்காவில் குடித்தனம் செய்திருக்கிறார்களாம். ஒரு கணவன் மனைவிக்கு எத்தனை மரியாதை தரவேண்டும் என்று அங்கே மித்ரா கற்றுக்கொண்டானாம். கணவனுக்கு மனைவி எத்தனை உபயோகமாய் இருக்க வேண்டும் என்று அவள் கற்றுக்கொண்டாளாம்; சொன்னார்கள்.

ஆ! இது என்ன அன்பு!

என்ன அருமையான தாம்பத்தியம்!

அன்று உருவான ஆச்சர்யம் அவர்களை மேற்கொண்டு பார்க்கப்பார்க்க அவனை முழுசாய் ஆட்கொண்ட பிறகு, தனக்கும் இந்த தினுசில் வாழ்க்கை அமைய வேண்டும் என்ற ஆசை அவனுள் ஏறி உட்கார்ந்துகொண்டது.

'வேலை கிடைச்சுடுத்தேடா, இனிமே பெண் பார்க்க வேண்டியதுதானே' என்று அம்மா தொணதொணக்கிறாள் என்பதற்காக உடனே சரி என்று சொல்லி கல்யாணம் பண்ணிக் கொண்டு திண்டாடக் கூடாது.

மித்ரா முப்பது வயசில்தான் கல்யாணம் பண்ணிக்கொண்டானாம். அதுவரை உழைத்து, பணம் சேர்த்து வீட்டுக்குத் தேவையான சாமான்களை வாங்கினானாம்.

நானும் அப்படித்தான் செய்யப் போகிறேன்.

இப்போது எனக்கு வயசு என்ன?

இருபத்து நாலு.

சம்பளம்?

ஆயிரத்து இருநூற்று சில்லறை.

ரைட்.

என் மனைவிக்கு வீட்டுக் காரியங்கள் கஷ்டமாய் இல்லாமல் இருக்கவேண்டும் என்றால் காஸ் அடுப்பு, மிக்ஸி, ஃபிரிட்ஜ், பிரஷர் குக்கர் அவசியம்.

அவளை இங்கு அங்கு கூட்டிப்போக எனக்கு ஒரு வெஸ்பா.

ஸோ, இவைகளை வாங்க எனக்கு எத்தனை பணம் தேவைப் படும்? அதைச் சேர்க்க எத்தனை வருஷங்கள் ஆகும்?

ஐந்து வருஷங்களில் சுலபமாய் தன் லட்சியத்தை நிறை வேற்றுவதுடன் கையில் ஓரளவுக்குப் பணமும் சேர்க்கமுடியும்

என்று அவன் கணக்குப் போட்டபின் அம்மாவுக்கு எனக்கு இப்போதைக்குக் கல்யாணம் வேண்டாம் என்று எழுதினான்.

"ஏண்டா?"

"இப்போ என்ன அவசரம்?"

"என்ன அவசரமா? வயசாச்சு, கை நிறைய சம்பளம். அப்புறம் என்னடா?"

அவன் பதில் எழுதவில்லை.

அம்மா—எனக்குப் பணம் சேர்க்கணும், சாமான்கள் வாங்கணும், வருபவளை நிம்மதியாய் வைத்துக் கொள்ளணும், நானும் அவளும் மிஸ்டர் அண்ட் மிஸஸ் மித்ரா மாதிரி வாழணும் என்று எழுதினால் அம்மா புரிந்துகொள்ளப் போகிறாளா? ம்ஹூம்—இல்லை.

இந்தப் பிள்ளை ஏன் இப்படி பெண்டாட்டிதாஸனாய் இருக்க ஆசைப்படறது என்பாள். எவளோ ஒருத்தி வர்றத்துக்கு முன்னாலே இவன் அடிக்கிற கூத்தைப் பாரேன் என்பாள். வர்ற பெண் சீர் செனத்தி கொண்டுவர மாட்டாளா? பெண்ணைப் பெத்தவா குடித்தனம் பண்ண சாமான் சஜ்ஜா வாங்கித்தர மாட்டாளா? இது என்ன கூத்து? என்று மனசுக்குள் மாய்ந்து போவாள்.

அதனால் அவன் எழுதவில்லை. ஊருக்குக்கூட அடிக்கடி போகாமல் அடுத்து வந்த வருஷங்களைத் தார்காட்டினான்.

அதிருஷ்டவசமாய் நாலு வருஷங்களிலேயே அவன் எதிர் பார்த்த தொகை சேர்ந்துவிட்டது.

வெஸ்பா, ஃபிரிட்ஜ், காஸ், மிக்ஸி அந்த வருஷம் வாங்கின பிறகு ஐந்தாம் வருஷம் காஸட் டேப்ரிகார்டர், சோபா ஸெட், காட்ரேஜ் அலமாரிக்கும் தான் தயார் என்று புரிந்ததும், அம்மா வுக்கு பெண் பார்க்கச் சொல்லி பச்சைக்கொடி காட்டினான்.

ஒரே மாசத்தில் எட்டு புகைப்படங்களோடு அம்மா பதில் எழுதினாள்.

எட்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்தான். சென்னைக்குப் போனான். பஜ்ஜி சொஜ்ஜி சாப்பிடாமல் அவளைப் பிடித்து விட்டது என்றான்.

ஊருக்குத் திரும்பும்போது மறக்காமல் அவள் புகைப்படத்தைக் கேட்டு வாங்கி வந்து மித்ரா தம்பதியிடம் காட்டினான்.

"ஓ! ஷி ஈஸ் ப்ரிட்டி...பேர் என்ன?"

"ரமா."

"என்ன படித்து இருக்கிறாள்?"

"பி.எஸ்ஸி. ஹோம் ஸயன்ஸ் அண்ட் லைப்ரரி ஸயன்ஸ்."

"ஆ—கிரேட். அப்படியென்றால் நம் லைப்ரரிக்கு ஒரு அழகான புது லைப்ரேரியன் வரப்போகிறாள் என்று சொல்லுங்கள்."

முகூர்த்தத்துக்கு இருந்த ஒரு மாச இடைவெளியில் சதா அவனைக் கேலி செய்து சிவக்கச் செய்தாலும், ஸோபா ஸெட் ஆர்டர் பண்ணி வீட்டை சிங்காரிப்பதிலிருந்து ஒவ்வொன்றிலும் அவர்கள் கூட நின்று உதவினார்கள்.

வீட்டைத் தன் சொந்த செலவில் அவன் பெயிண்ட் செய்தான்.

"பிங்க் ஈஸ் ஹாட்—பெட்ரூமுக்கு அந்த நிறத்தையே கொடுங்கள்." கொடுத்தான்.

"பத்து க்ரோடன்ஸ் செடித் தொட்டிகளை வாங்கி வராந்தாவில் வையுங்கள்."

வைத்தான்.

"விளக்குகளுக்கு 'ஷேட்' வாங்கிப் போடுங்கள்."

போட்டான்.

"மேட்சிங் கர்டன்கள் மாட்டுங்கள்."

மாட்டினான்.

இன்னும்...இன்னும்...

கண்களை அவன் திறந்தான்.

மேஜை மேல் பிரேம் போட்டு வைத்திருந்த அவள் புகைப்படத்தைப் பார்த்தான்.

சரியாய் ஒரு வாரம். அப்புறம் அவள் இங்கு என்னோடு நிஜமாய் இருப்பாள்.

நான் அவள் வருகையை ஐந்து வருஷங்களாய் ப்ளான் பண்ணி நடத்தியதைச் சொன்னால் அதிசயித்து நிற்பாள்.

நான் அவளுக்காகத் தயாரித்து வைத்திருக்கும் வீட்டைப் பார்த்து பிரமித்துப் போவாள்.

அவளுக்கு நான் எல்லா விஷயத்திலும் பக்கபலமாய், நல்ல துணையாய் இருக்க விரும்புவதை உணர்ந்து சிலிர்த்து உருகுவாள்...

அவன் அந்த ஒரு வாரத்தையும் கற்பனையில் கழித்துவிட்டு சென்னைக்குப் போனான்.

எண்ணி ஏழு நாட்கள்தான் லீவு. வேண்டுமென்றே அதிகம் போடவில்லை. இங்கு வந்துவிட்டு அப்புறமாய் பதினைந்து நாட்கள் மறுபடி விடுமுறை எடுத்துக்கொண்டு தேநிலவுக்கு அவளோடு காஷ்மீர் போகவேண்டும் என்று ஆசை.

கல்யாணம் அவன் விருப்பப்படி—ஜானவாஸம் இல்லாமல், பரதேசிக்கோலம் இல்லாமல், நலங்கு இல்லாமல், ரிஸப்ஷன் இல்லாமல், சாந்தி முஹூர்த்தம் இல்லாமல்—ஸிம்பிளாய் நடந்தது. மறுநாள் திருப்பதியில் கல்யாண உத்சவம். அதற்கும் மறு நாள் கிளம்பிவிட்டார்கள். ஒரு நிமிஷத் தனிமைகூடக் கிடைக்க வில்லை.

ஃபர்ஸ்ட் கிளாஸ். கூபே கம்ப்பார்ட்மெண்ட்.

வண்டி புறப்பட்டு வேகம் எடுத்துவிட்டது.

ஒரு பக்கமாய் உட்கார்ந்து ஜன்னலுக்கு வெளியில் வேடிக்கை பார்த்து வந்த அவளைப் பார்க்கையில் அவனுக்கு சந்தோஷமாய் இருந்தது. கொஞ்சம் படபடப்பாயும் இருந்தது.

கிட்டத்தில் சென்று நெருங்கி உட்கார்ந்தான். அவள் கையை எடுத்து மேலே அமுக்கினான்.

“ஹேய்! என்ன வேடிக்கை பார்க்கறே?” என்றான்.

“ஐ லவ் யு டார்லிங்” என்றான்.

“என்னைப் பாரேன்” என்றான்.

அவள் திரும்பினாள். கண்களைச் சிமிட்டாமல் அவனை உற்றுப் பார்த்தாள். கையைப் பிடித்திருந்த அவன் கையை

விலக்கினாள். உணர்ச்சி இல்லாத குரலில் அழுத்தமாய், நிதான மாய்ப் பேசினாள்.

“எனக்கு இந்தக் கல்யாணத்திலே இஷ்டம் இல்லே. ஐ லவ் ஸம்படி எல்ஸ். அவர் வேற ஜாதிங்கறதால அப்பா ஸெட் நோ. இந்தக் கல்யாணத்துக்கு நா ஒத்துக்கலைனா அப்பாவும், அம்மா வும் விஷம் குடிச்சு செத்துப் போயிடுவேன்னதால அவாளுக்காக நீங்க என்னைத் தொட்டு தாலி கட்ட சம்மதிச்சேன். தட்ஸ் ஆல். மனசிலே அசட்டுத்தனமா ஏதாவது ஆசையை வளர்த்துண்டு நீங்க என்னை நெருங்கக்கூடாதுனு நா இத்தனை வெளிப்படையா பேசறேன்...திஸ் மாரேஜ் ஹாஸ் நோ மீனிங் ஃபார் மீ...ஐ’ம் ஸாரி...”

*– ஆனந்த விகடன், 1979*